







# காந்தி தமிழ் வாசகம்



## இரண்டாம் வகுப்பு





பழனியப்பா பிரதர்ஸ்



# காந்தி தமிழ் வாசகம்

## இரண்டாம் வகுப்பு




வித்துவான் திரு. ஐயன்பெருமாள் கோனூர்
தமிழ்ப் பேராசிரியர்
அர்ச். சூசையப்பர் கல்லூரி, திருச்சி.



பழனியப்பா பிரதர்ஸ்
தெப்பக்குளம் & சேப்பாக்கம்
திருச்சிராப்பள்ளி & சென்னை - 5

பதிப்புரிமை] 1953 [அணா ஆறு

# KANTI TAMIL VACHAKAM

**STANDARD II**

**Vidwan T. Aiyenperumal Konar**

---

***First** Edition 1949*
***Fifth** Reprint 1953*




*Approved by the Text Book Committee, Madras*
*Vide Consolidated List Part I Page 23,*
*dated 13-5-'53.*

PRINTED AT THE ASIAN PRINTERS, MADRAS-5

# முகவுரை

---

காந்தி தமிழ் வாசகம் என்னும் பெயர்கொண்ட இவ்வாசகப் புத்தகங்கள் அரசியலார் 1939-ம் ஆண்டு வெளியிட்டுள்ள பாட திட்டத்திற்கிணங்க முதல் ஐந்து வகுப்புகளுக்குரியனவாக எழுதப்பட்டவையாகும்.

இவ்வாசக புத்தகங்களில் அமைந்துள்ள பாடங்கள் வகுப்பிற்கேற்ற நடையும் பொருளும் அளவும் கொண்டனவாய் ஆராய்ந்தமைக்கப்பட்டுள்ளன. பாடங்களினிறுதியில் அமைக்கப்பட்டுள்ள பயிற்சிகள் மாணவரது இயற்கையறிவைத் தூண்டுமாறும், தேர்ச்சி மிகுமாறும் செய்யவல்ல தன்மையில் இயற்றப்பட்டுள்ளன. கீழ் வகுப்புக்களில் படப் பயிற்சி சிறந்த முறையில் அளிக்கப்பட்டுள்ளது. இலக்கணப் பயிற்சி அந்தந்த வகுப்பிற்கேற்ற அளவில், உதாரணங்களைக் கொண்டு விதிகளை வருவிப்பதாகிய (விதி வருமுறை) Inductive Method என்னும் நன்முறையில் ஆக்கப்பெற்றுள்ளது.

மேற்கண்ட பல்வகை நலன்களும் அமைந்த இவ்வாசகப் புத்தகங்களைப் பள்ளியாசிரியர்களும் கல்வி இலாகா அதிகாரிகளும் பள்ளி மாணவர் கற்குமாறு செய்வார்களானால் அது சிறுவர்க்கும் பயனளிப்பதோடு எமக்கும் ஊக்கத்தையளித்து, பின்னும் இத்தகைய புத்தகங்களை வெளியிட ஏதுவாகும் என்று நம்புகிறோம்.

பழனியப்பா பிரதர்ஸ்

## பொருளடக்கம்



———

# காந்தி தமிழ் வாசகம்

## இரண்டாம் வகுப்பு

---

### 1. படம் பார்த்துப் படித்தல் I



1. சிறுவன் என்ன செய்கிறான் ?
2. சிறுமிகள் என்ன செய்கிறார்கள் ?
3. பந்து ஆடுபவர்கள் யார் ?
4. துணி துவைப்பது யார் ?
5. மாலை கட்டுவது யார் ?

# படம் பார்த்துப் படித்தல் II



1. படத்தில் நீ என்னென்ன பார்க்கிருய் ?
2. படகு எங்கே இருக்கிறது ?
3. ஆடுமாடுகள் என்ன செய்கின்றன?
4. மோட்டார் எங்கே இருக்கிறது ?
5. சூரியன் எங்கு இருக்கிறது ?
6. மலையில் காணப்படுவன யாவை ?

| | | |
|---|---|---|
| ஆற்றங்கரை | ஆழமானது | ஆடுமாடுகள் |
| படகு | நீந்துகிருர்கள் | செடிகொடிகள் |
| மலை | படகோட்டி | குளிக்கிருர்கள் |
| உயரமானது | பேசுகிருர்கள் | எதிர்க்கரை |

# படம் சேர்த்துப் படித்தல் I



பால் தரும்.



ஏர் உழும்.



வண்டி இழுக்கும்.



பொதி சுமக்கும்.



காவல் காக்கும்.



எலி பிடிக்கும்.

| | | | |
|---|---|---|---|
| பசு | கழுதை | ஏர் | காக்கும் |
| பால் | நாய் | காவல் | உழும் |
| எருது | பூனை | பொதி | இழுக்கும் |
| குதிரை | எலி | வண்டி | சுமக்கும் |

# படம் சேர்த்துப் படித்தல் II

முருகன்  படிக்கிருன்

சுந்தரி  போடுகிருள்

பிள்ளைகள்  ஆடுகிருர்கள்

பெண்  ஆடுகிருள்

இடையன்  மேய்க்கிருன்

உபாத்தியாயர்  வரைகிருர்

| | |
|---|---|
| முருகன் | உபாத்தியாயர் |
| சுந்தரி | சித்திரம் |
| ஊஞ்சல் | புத்தகம் |
| கோலம் | மேய்க்கிருன் |
| இடையன் | வரைகிருர் |



பழந் தின்னுவது



இங்கே நிற்பவன்



இதன் பெயர்



கூண்டினுள் இருப்பது



தட்டில் இருப்பவை



இங்கே மேய்பவை

| | | |
|---|---|---|
| பெயர் | தின்னுவது | அணில் |
| கூண்டினுள் | நிற்பவன் | தபால்காரன் |
| தட்டில் | மேய்பவை | யானை |
| இங்கே | இருப்பவை | பழங்கள் |





## 3. என் தெய்வம்

1. அம்மா அம்மா வருவாயே
அன்பாய் முத்தம் தருவாயே
அம்மா உன்னைக் கண்டாலே
அழுகை ஓடிப் போய்விடுமே.

2. அழகு மிக்க சந்திரனை
ஆகாயத்தில் காண்பித்தே
பழமும் பாலும் ஊட்டிடுவாய்
பாட்டும் கதையும் கூறிடுவாய்.

3. தமிழைக் கற்றுத் தந்திடுவாய்
தத்துப் பித்தெனப் பேசிடினும்
அமுதம் அமுதம் என்றிடுவாய்
அணைத்து முத்தம் தந்திடுவாய்.

4. உன்னைப் போல வளர்த்திடுவார்
உலகில் உண்டோ வேறொருவர்?
என்னைக் காக்கும் அம்மாவே
**எனக்குத் தெய்வம் நீதானே.**

—குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா

# வினவும் விடையும் I

மௌனமாய் வாசி; வினவையும் விடையையும் கவனி.

| வினு | | விடை |
|---|---|---|
| 1. உன் பெயர் என்ன? | ——— | சுந்தரம் |
| 2. உன் தகப்பனுர் பெயர் என்ன ? | ——— | வேதாசல முதலியார் |
| 3. உன் தாயார் பெயர் என்ன ? | ——— | நீலாம்பிகை அம்மையார் |
| 4. உங்கள் ஊர் எது? | ——— | திருவாரூர் |
| 5. இன்று என்ன கிழமை? | ——— | புதன்கிழமை |

மௌனமாய் வாசி ; மேலே காட்டிய மாதிரி விடை எழுது :

| வினு | விடை |
|---|---|
| 1. நீ வசிக்கும் தெருவில் பெயர் என்ன ? | ——— |
| 2. உன் வீட்டின் எண் என்ன ? | ——— |
| 3. உன் நண்பன் பெயர் என்ன ? | ——— |
| 4. உனக்கு வயது என்ன ? | ——— |
| 5. உங்கள் ஊர் எது ? | ——— |
| 6. உனக்கு அண்ணன் உண்டா ? | ——— |
| உன் தம்பியின் பெயர் என்ன ? | ——— |

| | | |
|---|---|---|
| முதலியார் | தகப்பனுர் | என்ன |
| அம்மையார் | தாயார் | நண்பன் |
| வயது | அண்ணன் | உனக்கு |
| உங்கள் | தம்பி | உண்டா |
| ஊர் | இன்று | வீட்டின் |
| தெருவின் | எண் | வசிக்கும் |

# வினவும் விடையும் II

மௌனமாய் வாசி; வினக்களையும் விடை களையும் கவனி:



1. வினு: உன் பெயர் என்ன?
   விடை: என் பெயர் சுந்தரம்.
2. வினு: உன் தகப்பனுர் பெயர் என்ன?
   விடை: என் தகப்பனுர் பெயர் வேதாசல முதலியார்.
3. வினு: உன் தாயார் பெயர் என்ன?
   விடை: என் தாயார் பெயர் நீலாம்பாள்.
4. வினு: உங்கள் ஊர் எது?
   விடை: எங்கள் ஊர் திருவாரூர்.

மௌனமாய் வாசி; மேலே காட்டிய மாதிரி விடை எழுது:

1. நீ வசிக்கும் தெருவின் பெயர் என்ன?
2. உன் வீட்டின் எண் என்ன?
3. உன் நண்பன் பெயர் என்ன?
4. உனக்கு வயது என்ன?
5. உனக்கு அண்ணன் உண்டா?
6. உனக்குத் தம்பி உண்டா?

## 5. கோடிட்ட இடங்களை நிரப்புதல்

கோடிட்ட இடங்களை நிரப்பு :

1. கண்களால் ———.
கண்களால் பார்க்கிறோம்.

2. மூக்கால் ———.
மூக்கால் முகருகிறோம்.

3. பற்களால்———
பற்களால் கடிக்கிறோம்.

4. எள்ளில் இருந்து ——— கிடைக்கும்.
எள்ளில் இருந்து எண்ணெய் கிடைக்கும்.

5. வெண்ணெயில் இருந்து——— கிடைக்கும்.
வெண்ணெயில் இருந்து நெய் கிடைக்கும்.

6. முகத்தில் ——— இருக்கின்றன.
முகத்தில் கண்கள் இருக்கின்றன.

| | | |
|---|---|---|
| முகம் | பார்க்கிறோம் | எள் |
| மூக்கு | முகருகிறோம் | நெய் |
| கண்கள் | கடிக்கிறோம் | எண்ணெய் |
| பற்கள் | கிடைக்கும் | வெண்ணெய் |

## 6. வாக்கிய அமைப்பு I



நான் பாடம் படிக்கிறேன்.

நாங்கள் பாடம் படிக்கி
றோம்.

நீ பந்து விளையாடுகிறாய்.

நீங்கள் பாட்டுப் பாடுகிறீர்கள்.

அவன் வண்டி ஓட்டுகிறான்.

அவள் துணி தைக்கிறாள்.

அவர்கள் வேலை செய்கிறார்கள்.

அது மெதுவாகப் போகிறது.

அவை வேகமாகப் போகின்றன.

| | | |
|---|---|---|
| நான் | அவன் | அவை |
| நாங்கள் | அவள் | மெதுவாக |
| நீ | அவர்கள் | வேகமாக |
| நீங்கள் | அது | ஓட்டுகிறான் |

### பயிற்சி

விடை கூறு:

1. *நான் என்ன செய்கிறேன்?*
2. *நீ என்ன செய்கிறாய்?*
3. *அவர்கள் என்ன செய்கிறார்கள்?*

கோடிட்ட இடங்களை நிரப்பு:

1. *அவன் ——— ஓட்டுகிறான்.*
2. *——— வேகமாகப் போகின்றன*
3. *அவள் துணி ———.*

# வாக்கிய அமைப்பு II



நான் கடைக்குப் போகிறேன்.

நானும் நீயும் கடைக்குப் போவோம்.

நானும் நீயும் அவனும் கடைக்குப் போவோம்.

நாம் கடைக்குப் போவோம்.

நீ பாடம் படிக்கிருய்.

நீயும் அவனும் பாடம் படிக்கிறீர்கள்.

நீங்கள் பாடம் படிக்கிறீர்கள்.

அவன் பொம்மை வைத்திருக்கிருன்.

அவள் பொம்மை வைத்திருக்கிருள்.

அவனும் அவளும் பொம்மை வைத்திருக்கிருர்கள்.

## பயிற்சி

**விடை கூறு :**

1. நாம் என்ன செய்கிரேும்?
2. நீங்கள் என்ன செய்கிறீர்கள் ?
3. அவர்கள் என்ன செய்கிருர்கள் ?

**கோடிட்ட இடங்களில் சரியான வார்த்தையை எழுது :**

1. நானும் நீயும் ———.
2. ——— எங்கே போகிறீர்கள்.
3. ——— ——— போகிருர்கள்.
4. ——— ——— ——— கடைக்குப் போனேம்.
5. ——— பொம்மை வைத்திருக்கிருள்.

## வாக்கிய அமைப்பு III

மணி என்னுடன் விளையாடுவான்.

அவன் என்னுடன் விளையாடுவான்.

மங்களம் பாட்டுப் பாடுவாள்.



அவள் பாட்டுப் பாடுவாள்.

பாட்டனார் மெதுவாய் நடக்கிறார்.

அவர் மெதுவாய் நடக்கிறார்.

தகப்பனார் குழந்தையுடன் கொஞ்சுகிறார்.

தாயார் குழந்தையுடன் கொஞ்சுகிறார்.

அவர்கள் குழந்தையுடன் கொஞ்சுகிறார்கள்.

பசு பால் தருகிறது.

அது பால் தருகிறது.

பசுக்கள் பால் தருகின்றன.

அவை பால் தருகின்றன.

### பயிற்சி

விடை கூறு:

1. பாட்டனார் என்ன செய்கிறார்?
2. தாயார் என்ன செய்கிறார்?
3. பசுக்கள் என்ன தருகின்றன?

கோடிட்ட இடங்களை நிரப்பு:

1. மங்களம் பாட்டுப்————.
2. ———— பாட்டுப் பாடுகிறாள்.
3. ———— பாட்டுப் பாடுவாள்.
4. பசுக்கள் பால் ————.
5. ———— பால் தருகின்றன.

## வாக்கிய அமைப்பு IV

இராமன் பந்தை வீசி எறிகிறுன்.
குதிரை வண்டியை இழுக்கிறது.
நாம் காதுகளால் கேட்கிறேம்.
கமலம் சுந்தரியோடு வருகிறுள்.
கமலம் சுந்தரியுடன் வருகிறுள்.
குதிரைக்குக் கொம்பு இல்லை.
தென்னைக்குக் கிளை இல்லை.
மாமரத்திலிருந்து மாம்பழம் கிடைக்கும்.
வாழை மரத்திலிருந்து வாழைப்பழம் கிடைக்கும்.
இது கிட்டுவினுடைய பந்து.
இது பட்டுவினுடைய பாவாடை.
கையில் விரல்கள் இருக்கின்றன.
காக்கை மரத்தில் இருக்கிறது.

### பயிற்சி

கோடிட்ட இடங்களை நிரப்பு :

1. குதிரை ——— இழுக்கிறது.
2. நாம் ——— கேட்கிறேம்.
3. ——— மாம்பழம் கிடைக்கிறது.
4. இது ——— பாவாடை.

பொருத்தமான வார்த்தைகளை ஒன்று சேர்:

கேட்கிறேம், கொம்பு, மாம்பழம், விரல்கள்,
கிடைக்கும், இல்லை, காதுகளால், மாமரத்திலிருந்து,
நாம், குதிரைக்கு, இருக்கின்றன, கையில்.

# 7. சேற்றில் தாமரை



மனிதர் வெறுக்கும் சேற்றிலே
மலர்ந்து நிற்கும் தாமரை.
புனித மான கடவுளைப்
பூசை செய்ய உதவுதே!



அழுக் கடைந்த சிப்பியில்
அருமை யான முத்து வாம்.
கழுத்தில் நல்ல மாலையாய்க்
கட்டி மகிழ உதவுதே!



கன்னங் கரிய குயிலிடம்
காது குளிரும் கீதமாம்.
இன்பம் இன்பம் என்று நாம்
இன்னுங் கேட்கச் செய்யுதே!



விடத்தில் மிக்க பாம்பிடம்
விலை யுயர்ந்த ரத்தினம்.
அடடா, அந்த ரத்தினம்
அரச ருக்கும் கிட்டுமோ ?



ஊசி போன்ற முள்ளிலே,
உயர்ந்த ரோஜா மலருதே,
வீசி நல்ல வாசத்தை,
விரும்பி அணியச் செய்யுதே!

மோச மான இடத்திலும்
மிகவும் நல்ல பொருள் உண்டு.
யோசிக் காமல் எவரையும்
ஏள னம் நீ செய்வதேன்!

—குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா

| | | | |
|---|---|---|---|
| தாமரை | முத்து | இன்பம் | விடத்தில் |
| கீதம் | வாசம் | குயில் | ரத்தினம் |
| பூசை | விரும்பி | குளிரும் | விலையுயர்ந்த |
| வெறுக்கும் | மோசமான | ஏளனம் | யோசிக்காமல் |

### பயிற்சி

**விடை கூறு:**

1. தாமரைப்பூ எங்கே இருக்கும்?
2. தாமரை எதற்கு உதவும்?
3. முத்து எங்கே அகப்படும்?
4. முத்தை என்ன செய்கிறார்கள்?

**கோடிட்ட இடங்களை நிரப்பு:**

1. குயில் கறுப்பாய் ————.
2. குயிலின் ———— இனிமையானது.
3. ரோஜாச் செடியில் ———— இருக்கும்.
4. ரோஜாப்பூ ———— இருக்கும்.

———

## 8. நிறங்கள்

பாலின் நிறம் வெள்ளை.

புல்லின் நிறம் பச்சை.

இரத்தத்தின் நிறம் சிவப்பு.

வானத்தின் நிறம் நீலம்.

சாமந்திப்பூவின் நிறம் மஞ்சள்.

காக்கையின் நிறம் கறுப்பு.

பலவகை நிறங்களில் துணிகள் கிடைக்கும்.

சில துணிகள் சாம்பல் நிறமாய் இருக்கும்.

சில துணிகள் அரக்கு நிறமாய் இருக்கும்.

சில துணிகள் பாக்கு நிறமாய் இருக்கும்.

சில துணிகள் பாசி நிறமாய் இருக்கும்.

சில துணிகள் கத்திரிப்பூ நிறமாய் இருக்கும்.

| | | |
|---|---|---|
| வெள்ளை | நிறம் | சாம்பல் |
| சிவப்பு | முட்டை | அரக்கு |
| பச்சை | இரத்தம் | பாக்கு |
| கறுப்பு | வானம் | பாசி |
| மஞ்சள் | சாமந்திப்பூ | கத்திரிப்பூ |

## பயிற்சி

**விடை கூறு :**

1. பச்சை நிறமுள்ள பொருள்கள் மூன்று கூறு.
2. எலுமிச்சம்பழத்தின் நிறம் என்ன ?
3. கோழி முட்டை என்ன நிறம் ?
4. வெள்ளை நிறப் பூ ஒன்று சொல்லு.

**கோடிட்ட இடத்தை நிரப்பு :**

1. பூவரசம்பூ ——— நிறமானது.
2. ——— வெண்மை நிறமானது.
3. இலைகள் ——— நிறமாய் ———.
4. மை ——— நிறமாய் ———.

## மௌன வாசிப்பு

கீழ்க் கண்டவற்றைப் படித்து அவற்றிற்கு நேராகச் 'சரி' அல்லது 'தப்பு' என்று குறிப்பிடு:

1. புல்லின் நிறம் வெள்ளை.
2. மோரின் நிறம் பச்சை.
3. மாங்காய் பச்சை நிறமானது.
4. எலுமிச்சம்பழம் நீலமாய் இருக்கிறது ?
5. மோரின் நிறம் வெள்ளை.
6. கோழி முட்டை கறுமை நிறம்.
7. வானம் நீலமாயிருக்கிறது.
8. பாலின் நிறம் வெள்ளை.

**பொருத்தமான வார்த்தைகளை ஒன்று சேர் :**

பால், இலை, காக்கை, இரத்தம்.
கறுப்பு, சிவப்பு, வெள்ளை, பச்சை.

———

## 9. சுவைகள்

| | | |
|---|---|---|
| வெல்லம் | இனிப்பாய் | இருக்கும். |
| வெல்லத்தின் | சுவை | இனிப்பு. |
| மிளகாய் | காரமாய் | இருக்கும். |
| மிளகாயின் | சுவை | கார்ப்பு. |
| பாகற்காய் | கசப்பாய் | இருக்கும். |
| பாகற்காயின் | சுவை | கசப்பு. |
| கடுக்காய் | துவர்ப்பாய் | இருக்கும். |
| கடுக்காயின் | சுவை | துவர்ப்பு. |
| உப்பு | உவர்ப்பாய் | இருக்கும். |
| உப்பின் | சுவை | உவர்ப்பு. |
| புளியம்பழம் | புளிப்பாய் | இருக்கும். |
| புளியம்பழத்தின் | சுவை | புளிப்பு. |

| | | |
|---|---|---|
| இனிப்பு | துவர்ப்பு | கடுக்காய் |
| புளிப்பு | கசப்பு | வெல்லம் |
| கார்ப்பு | பாகற்காய் | உப்பு |
| உவர்ப்பு | புளியம்பழம் | மிளகாய் |

## பயிற்சி

விடை கூறு:

1. எலுமிச்சம்பழம் தின்ருல் எப்படி இருக்கும்?
2. எலுமிச்சம்பழத்தின் சுவை என்ன?
3. மாம்பழத்தின் சுவை என்ன?
4. வெல்லம் எப்படி இருக்கும்?
5. காரமான பொருள்கள் இரண்டு கூறு.

கோடிட்ட இடங்களை நிரப்பு:

1. ——— துவர்க்கும்.
2. வாழைப்பழத்தின் சுவை———.
3. சர்க்கரை ——— இருக்கும்.
4. ——— சுவை கார்ப்பு.
5. ——— உவர்ப்பாய் இருக்கும்.

## மௌன வாசிப்பு

கீழ் உள்ளவற்றை மௌனமாய் வாசித்து 'சரி' அல்லது 'தப்பு' என்று எழுது:

1. மிளகாயின் சுவை இனிப்பு.
2. கற்கண்டின் சுவை புளிப்பு.
3. மாம்பழத்தின் சுவை உவர்ப்பு.
4. மிளகு காரமாய் இருக்கும்.
5. மிட்டாய் இனிப்பாய் இருக்கும்.
6. பாகற்காயின் சுவை புளிப்பு.
7. கரும்பு கசப்பாய் இருக்கும்.
8. எலுமிச்சம்பழத்தின் சுவை புளிப்பு.

சுவைப் பொருத்தம் உள்ளவைகளை ஒன்று சேர்:

மிளகு, இனிப்பு, கடுக்காய், புளிப்பு, துவர்ப்பு, கார்ப்பு, புளியம்பழம், பலாப்பழம்.

———

## 10. கையில்—என்ன ? கடவுள்

(வினு விடை விளையாட்டு)

| | | |
|---|---|---|
| ஐயா ஐயா | | கையில் என்ன ? |
| பையா பையா | | கையில் தண்டு |
| என்ன தண்டு | — | கீரைத் தண்டு |
| என்ன கீரை | — | முளைக் கீரை |
| என்ன முளை | — | நெல் முளை |
| என்ன நெல் | — | சம்பா நெல் |
| என்ன சம்பா | — | மிளகு சம்பா |
| என்ன மிளகு | — | வால் மிளகு |
| என்ன வால் | — | எலி வால் |
| என்ன எலி | — | முள்ளெலி |
| என்ன முள் | — | மூங்கில் முள் |
| என்ன மூங்கில் | — | மலை மூங்கில் |
| என்ன மலை | — | நீல மலை |
| என்ன நீலம் | — | கரு நீலம் |
| என்ன கரு | — | மஞ்சட் கரு |
| என்ன மஞ்சள் | — | விரல் மஞ்சள் |
| என்ன விரல் | — | கால் விரல் |
| என்ன கால் | — | மரக்கால் |
| என்ன மரம் | — | மாமரம் |
| என்ன மா | — | கோலமா |
| என்ன கோலம் | — | வீதிக் கோலம் |
| என்ன வீதி | — | உள் வீதி |
| என்ன உள் | — | **கடவுள்.** |

# II. விடுகதைகள்

1. தாயார் சமுத்திரத் தாள்
தந்தை சூரிய னூர்
தரணியில் எனைக் கொண்டு
தாங்காத வீடில்லை — நான் யார்? —(உப்பு)

2. உருளும் சக்கர வண்டியாம்
ஓடிப் போகா வண்டியாம்
மானம் காக்கும் வண்டியாம்.
மகாத்மா போற்றும் வண்டியாம்.
— (இராட்டினம்)

3. ஒரு மரத்திற்குப் பன்னிரண்டு கிளைகள்
ஒரு கிளைக்கு நான்கு இலைகள்
ஒரு இலைக்கு ஏழு காய்கள்
ஒரு காய்க்கு இருபத்திநாலு விதைகள்.
— (வருஷம், மாதம், வாரம், கிழமை, மணி)

4. கை உண்டு; கால் இல்லை.
கழுத்து உண்டு; தலை இல்லை.
பை உண்டு; பணம் இல்லை.
நெஞ்சு உண்டு; மூச்சு இல்லை. — (சட்டை)

# 12. நரியும் திராக்ஷைக் குலையும்

படம் பார்த்துக் கதை சொல் :



(விடை கூறு : வாக்கியங்களாக விடை சொல்லவும்)

1. முதல் படத்தில் நீ என்ன பார்க்கிறாய் ?
2. இரண்டாம் படத்தில் இருப்பது என்ன ?
3. மூன்றாம் படத்தில் நரி என்ன செய்கிறது?
4. நான்காம் படத்தில் நரி செய்வது என்ன ?
5. ஐந்தாம் படத்திலிருந்து நீ அறிவது என்ன ?
6. ஆறாம் படத்தில் நரி என்ன செய்கிறது ?

# 13. படப் பயிற்சி I



### பயிற்சி

1. மேலே கண்ட பொருள் ஒவ்வொன்றிலும் ஒரு தவறு இருக்கிறது. அது என்ன என்று கண்டுபிடித்துச் சொல்லவும்.

2. தவறுகளை வாக்கியங்களாகச் சொல்லச் செய்யவும்.

3. மௌனப் பயிற்சி: கீழே கண்டவைகளிலுள்ள தவற்றைக் கண்டுபிடித்து அததற்கு நேரே எழுதுக.

| | | | |
|---|---|---|---|
| சைக்கிள் | ———— | கடிகாரம் | ———— |
| குதிரை | ———— | ரம்பம் | ———— |
| சிங்கம் | ———— | கொக்கு | ———— |
| வண்டி | ———— | கிளி | ———— |

# படப் பயிற்சி II



## பயிற்சி

1. மேலே காட்டியுள்ள படத்தில் பல பொருள்கள் உள்ளன. அவை பல ஜோடிகளாகச் சேர்க்கக்கூடியவை. அவற்றைப் பொருத்தமாக ஜோடி சேர்த்துச் சொல்.

2. **மௌனப் பயிற்சி :** கீழே அட்டவணையில் உள்ள பொருள்களுக்குப் பொருத்தமானவற்றை அததற்கு நேராக எழுது.

| | |
|---|---|
| மைக்கூடு ———— | டென்னிஸ் மட்டை ———— |
| வண்டி ———— | கோட்ஸ்டாண்டு ———— |
| பூட்டு ———— | நாற்காலி ———— |




## 14. கிழமைகள்

இன்று என்ன கிழமை?
இன்று புதன் கிழமை.
நேற்று என்ன கிழமை?
நேற்று செவ்வாய்க் கிழமை,
நாளை என்ன கிழமை?
நாளை வியாழக் கிழமை.

எந்தெந்தக் கிழமைகளில் பள்ளிக்கூடம் இல்லை?

சனிக் கிழமையும் ஞாயிற்றுக் கிழமையும் பள்ளிக் கூடம் இல்லை.

ஞாயிற்றுக் கிழமைக்கு அடுத்த நாள் என்ன கிழமை தெரியுமா? திங்கட் கிழமை.

வியாழக் கிழமைக்கு அடுத்த நாள் வெள்ளிக் கிழமை.

இப்பொழுது எல்லாக் கிழமைகளையும் சொல்லியாகி விட்டது. அவற்றை வரிசையாகச் சொல்லுவோம்.

ஞாயிற்றுக் கிழமை
திங்கட் கிழமை
செவ்வாய்க் கிழமை
புதன் கிழமை
வியாழக் கிழமை
வெள்ளிக் கிழமை
சனிக் கிழமை

இந்த ஏழு கிழமைகளும் சேர்ந்து ஒரு **வாரம்** ஆகும். ஆதலால் வாரத்திற்கு நாட்கள் ஏழு. இவ்விதம் நான்கு வாரங்கள் ஆனால் ஒரு மாதம் ஆகும். மாதங்கள் பன்னிரண்டு ஆனால் ஒரு வருஷம் முடியும்.

| | | |
|---|---|---|
| ஞாயிறு | வெள்ளி | கிழமை |
| திங்கள் | சனி | மாதம் |
| செவ்வாய் | வாரம் | வருஷம் |
| புதன் | முடிவு | அடுத்த |
| வியாழன் | நேற்று | இன்று |

## பயிற்சி

### I வினாக்கள்

1. கிழமைகளை வரிசையாகச் சொல்லு.
2. வெள்ளிக்கிழமைக்கு அடுத்தது என்ன கிழமை ?
3. பள்ளிக்கூடம் உள்ள கிழமைகள் எவை ?
4. ஒரு மாதத்திற்கு எத்தனை வாரங்கள் ?
5. ஒரு வருஷத்திற்கு எத்தனை மாதங்கள் ?

கோடிட்ட இடங்களை நிரப்பு :

1. ஞாயிற்றுக்கிழமை பள்ளிக்கூடம் ———.
2. ——— பள்ளிக்கூடம் உண்டு.
3. வாரத்துக்கு ——— ஏழு.
4. மாதத்திற்கு வாரங்கள் ———.
5. ——— மாதங்கள் பன்னிரண்டு.

### II மௌனப் பயிற்சி

1. வாரத்தின் நாட்களை வரிசையாக எழுது.
2. பள்ளிக்கூடம் உள்ள நாட்களை வரிசையாக எழுது.
3. பள்ளிக்கூடம் இல்லாத கிழமைகளை எழுது.

## 15. நாயும் ஈக்களும்

ஓர் ஊரில் நாய் ஒன்று இருந்தது. நாயை ஒட்டிக் கொண்டு சதா தொந்தரவு செய்யும் ஒரு வகை ஈக்கள் சில அந்த நாயின் உடம்பில் ஒட்டிக் கொண்டன. அவற்றைப் போக்க அந்த நாய் பல வகைகளிலும் முயன்றது. ஈக்கள் போகவே இல்லை. கடைசியாக அது ஒரு யுக்தி செய்தது.

அந்த நாய் தன் வாயில் ஒரு நீண்ட குச்சியைக் கௌவிக் கொண்டது. தான் வசிக்கும் ஊரின் பக்கத்தில் இருந்த ஒரு சிறு ஓடைக்கு அது சென்றது. ஓடையில் நீர் நிரம்ப ஓடிக் கொண்டு இருந்தது.



முதலில் நாய், முழங்கால் வரையில் நீரில் இறங்கிச் சற்று நின்றது. காலில் இருந்த ஈக்கள் முழங்காலுக்கு மேல் வந்தன. பிறகு, அது இடுப்பளவுக்கு இறங்கிச் சற்று நின்றது. ஈக்கள் எல்லாம் உடனே இடுப்புக்கு மேல் வந்தன. பிறகு அது கழுத்தளவிற்கு இறங்கிற்று. தலையை மட்டும் தூக்கிக் கொண்டு கொஞ்சநேரம் நின்றது. ஈக்கள், தலையிலும் வாயில் இருந்த குச்சியிலும் ஏறிக்கொண்டன.

அப்பால், நாய் கடைசியாக, தன் வாய் வரையில் தண்ணீரில் அமிழ்ந்து நின்றது. ஈக்கள்

எல்லாம் குச்சியில் ஏறி உட்கார்ந்துகொண்டன. பிறகு நாய், குச்சியை நீரில் விட்டுவிட்டுத் தண்ணீரில் முழுகிச் சிறிதுதூரம் நீந்திச் சென்று கரை ஏறிற்று.

இவ்வாறு நாய், தன் யுக்தியால் துன்பம் தீர்ந்தது.

நுண்ணிய அறிவு துன்பத்தைப் போக்கும்.

| | | |
|---|---|---|
| நாய் | முழங்கால் அளவு | நீந்தி |
| குச்சி | ஒட்டிக் கொண்டன | தீர்ந்தது |
| ஓடைக்கு | கடைசியாக | நுண்ணிய |
| இடுப்பளவு | முழுகி | அறிவு |

பயிற்சி

I வினுக்கள்

1. நாய்க்கு உண்டான துன்பம் என்ன ?
2. ஈக்களைப் போக்க நாய் என்ன யுக்தி செய்தது ?
3. நாய் ஏன் முதலில் முழங்கால் அளவு ஆழத்தில் நின்றது ?
4. ஈக்கள் எப்போது குச்சியை அடைந்தன ?

II. நாய், ஈக்கள், குச்சி: இவ்வார்த்தை ஒவ்வொன்றையும் அமைத்து ஒவ்வொரு வாக்கியம் எழுது.

## 16. ஓடி விளையாடு பாப்பா

1. ஓடி விளையாடு பாப்பா—நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா.
கூடி விளையாடு பாப்பா,—ஒரு
குழந்தையை வையாதே பாப்பா.

2. சின்னஞ் சிறு குருவி போல—நீ
திரிந்து பறந்து வா பாப்பா.
வன்னப் பறவைகளைக் கண்டு—நீ
மனதில் மகிழ்ச்சி கொள்ளு பாப்பா.

3. பாலைப் பொழிந்து தரும் பாப்பா,-அந்தப்
பசு மிக நல்லதடி பாப்பா;
வாலைக் குழைத்து வரும் நாய்தான்-அது
மனிதர்க்குத் தோழனடி பாப்பா.

4. பொய்சொல்லக்கூடாது பாப்பா, என்றும்
புறம் சொல்ல லாகாது பாப்பா,
தெய்வம் நமக்குத் துணை பாப்பா,—ஒரு
தீங்கு வர மாட்டாது பாப்பா.

5. சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே,—அதைத்
தொழுது படித்திடடி பாப்பா;
செல்வம் நிறைந்த ஹிந்துஸ்தானம்,—அதைத்
தினமும் புகழ்ந்திடடி பாப்பா.

—தேசியக் கவி சுப்பிரமணிய பாரதியார்

# 17. வடமொழி எழுத்துக்கள்

**ஜ** இது ரோஜாச் செடி. இதில் ரோஜாப்பூ பூக்கும். ரோஜாப்பூ மாலை நீ பார்த்திருக்கிறாயா? ரோஜாப்பூ எவ்வளவு அழகாய் இருக்கிறது. இன்னும் அது நல்ல வாசனையும் உள்ளது அது பூஜைக்கு உதவும்.



**ஸ** இதோ பார் நல்ல பாம்பு. இதற்கு ஸர்ப்பம் என்று பெயர். ஸர்ப்பத்தின் ஸமீபத்தில் போகக் கூடாது. அதைக் கண்டால் ஸகல ஜனங் களும் பயப்படுவார்கள். ஸர்ப்பம் புற்றுக்களில் இருக்கும்.



**ஷ** படத்தில் இருப்பவர் யார்? இவர் தான் கிருஷ்ண பகவான். இவர் விஷ்ணு வின் அவதாரம். நமது நாட்டில் விஷ்ணு கோவில்கள் பல இடங் களில் இருக்கின்றன. திருப்பதி மிகவும் சிறந்த விஷ்ணு ஸ்தலம்.



**ஹ** இதோ படத்தில் ஹநுமாரைப் பார். ஹநுமார் ராம பக்தி மிகுந்தவர் விஷ்ணு கோவில்களில் எல்லாம் ஹநுமார் விக்ரஹம் இருக்கும் விஷ்ணு பக்தர்கள் ஹநுமாருக் கும் பூஜை செய்வார்கள். அவர் கழுத்தில் துளஸி ஹாரம் பார்.



**க்ஷ** இந்தப் படத்தில் பல பக்ஷிகள் காணப் படுகின்றன. காக்கை, கிளி, பருந்து முதலிய எல்லாப் பறவை களும் பக்ஷிகள் என்று சொல்லப் படும். பக்ஷிகளை ஹிம்ஸை செய் யக்கூடாது. அழகிய பக்ஷிகளைப் பார்ப்பது ஆஹா எவ்வளவு இனிமையான காக்ஷி!



**ஸ்ரீ** இந்தப் படம் லக்ஷ்மி தேவியின் படம் லக்ஷ்மி தேவிக்கு ஸ்ரீதேவி என்றும் பெயர். தேவர்களுடைய பெய ருக்கு முன்னால் ஸ்ரீ என்பதைச் சேர்ப்பது வழக்கம். ஸ்ரீராமர், ஸ்ரீ கிருஷ்ணர், ஸ்ரீ ஸரஸ்வதி, ஸ்ரீ பார்வதி என்று சொல்வதை நீங்கள் கேட்டிருக்கலாம். புண் ணிய ஸ்தலங்களின் பெயருக்கு முன்னும் ஸ்ரீ என் பதைச் சேர்ப்பது உண்டு. ஸ்ரீரங்கம் ஸ்ரீசைலம் என்பவை புண்ணிய க்ஷேத்திரங்கள்.



| | | | |
|---|---|---|---|
| ரோஜா | | கிருஷ்ணர் | ஸ்ரீதேவி |
| பூஜை | | விஷ்ணு | ஸ்ரீஸரஸ்வதி |
| ஜனங்கள் | | ஹநுமார் | ஸ்ரீரங்கம் |
| ஸர்ப்பம் | | ஹிம்சை | ஸ்ரீசைலம் |
| ஸமீபம் | துளஸி | ஆஹா | பக்ஷிகள் |
| ஸகல | ஸ்தலம் | விக்ரஹம் | காக்ஷி |

**பயிற்சி**

**விடை கூறு:**

1. ஜ என்னும் எழுத்து வரும்படி இரண்டு வார்த்தை கள் சொல்லு.

2. இந்தப் பாடத்தில் எத்தனை வடமொழி எழுத்துக் கள் உள்ளன?



# 18. எங்கள் வீடு

இது எங்கள் வீடு. எங்கள் வீடு ஓட்டு வீடு தான். ஆனாலும் நல்ல வீடு. அதில் நான்கு அறைகள் இருக்கின்றன. அவை படிப்பு அறை, படுக்கை அறை, சாமான் அறை, சமையல் அறை என்பன.

நான் இரண்டாம் வகுப்பு மாணவன். என் பெயர் கண்ணன். நான் படிப்பு அறையில் படிப்பேன். அங்கே ஒரு மேஜை இருக்கிறது. அதன் மேல் என் புத்தகங்கள் இருக்கின்றன. என் கற்பலகை, நோட்டு, பலப்பம், பென்சில் இவைகளும் அதன் மேல் தான் இருக்கின்றன. அந்த அறையை நான் சுத்தமாக வைத்திருப்பேன்.

படுக்கை அறையில் கட்டில், மெத்தை, தலையணை, போர்வை, கொசுவலை, பாய் முதலியவை இருக்கின்றன. இன்னும் அங்கே பீரோ, நிலைக் கண்ணாடி முதலியவைகளும் இருக்கின்றன.

சாமான் அறையில் பல டப்பாக்கள் இருக்கின்றன. இன்னும் பல பெட்டிகளும் பாத்திரங்களும் அங்கே இருக்கின்றன.

சமையல் அறையில் அடுப்பு, அம்மி, கல்லுரல், மரவுரல், குழவி, சமையல் பாத்திரங்கள் இவை இருக்கின்றன. அந்த அறை மிகவும் சுத்த மானது. அங்கு வெளிச்சம் அதிகம். மற்ற அறைகளும் அதிக வெளிச்சம் உள்ளவைகளே.

| | | | |
|---|---|---|---|
| ஓட்டு வீடு | கற்பலகை | கட்டில் | அடுப்பு |
| படிப்பு அறை | பலப்பம் | மெத்தை | அம்மி |
| படுக்கை அறை | கோட்டு | தலையணை | கல்லுரல் |
| சமையல் அறை | பென்சில் | போர்வை | மரவுரல் |
| சாமான் அறை | மேஜை | கொசுவலை | குழவி |
| நிலைக்கண்ணாடி | பீரோ | மிகவும் | வெளிச்சம் |

## பயிற்சி

### I வினாக்கள்

1. கண்ணன் வீட்டில் எத்தனை அறைகள் உண்டு?
2. படிக்கும் அறையில் இருப்பவை யாவை?
3. சாமான் அறையில் உள்ள சாமான்களைச் சொல்லு.
4. அறைகள் எப்படி இருக்கவேண்டும்?
5. உங்கள் வீட்டைப் பற்றிச் சில வாக்கியங்கள் கூறு.

### II மௌனப் பயிற்சி

கீழ்க்கண்டவைகளை மௌனமாய் வாசி: அதைப்போல் கோடிட்ட இடங்களில் வார்த்தைகளை அமை:

| | |
|---|---|
| மேஜை இருக்கிறது. | பீரோ ———. |
| மேஜைகள் இருக்கின்றன. | பீரோக்கள் ———. |
| பாத்திரம் உள்ளது. | ——— புத்தகம். |
| பாத்திரங்கள் உள்ளன. | ——— புத்தகங்கள். |

## 19. விருந்து

ஒரு காட்டில் ஒரு நரியும் ஒரு கொக்கும் சிநேகமாக இருந்தன. ஒரு நாள் நரி கொக்கினது நீண்ட மூக்கைப் பார்த்து, அதைக் கேலி செய்ய எண்ணிற்று. அதற்காக அது ஒரு யுக்தி செய்தது. அதாவது: கொக்கைத் தன் வீட்டிற்கு விருந்துக்கு அழைத்தது. கொக்கும் சென்றது.



நரி, இரண்டு தட்டுக்களில் பாயசம் கொண்டு வந்தது. ஒன்றைத் தான் சாப்பிட வைத்துக் கொண்டது. மற்றொன்றைக் கொக்கின் பக்கத்தில் வைத்து, 'பாயசம் குடியுங்கள்; மிகவும் நன்றாக இருக்கும்' என்று உபசரிப்பதுபோல் பாசாங்கு செய்தது. கொக்கால் பாயசத்தைக் குடிக்கவே முடியவில்லை. நரி தன் நாக்கினால் நக்கி நக்கி நன்றாகக் குடித்தது. குடிக்கும்போது 'கொக்கை ஏமாற்றி விட்டோம்' என்று நரி தனக்குள் சந்தோஷப்பட்டது.

தன்னைக் கேலி செய்யவே நரி இப்படிச் செய்தது என்பதைக் கொக்கு தெரிந்துகொண்டது. 'நரியைப் பதிலுக்குப் பதில் ஏமாற்றவேண்டும்' என்று உடனே கொக்கு தீர்மானித்தது. அதற்கு ஏற்ற சூழ்ச்சி ஒன்றும் செய்தது. அதாவது: அது நரியைப் பார்த்து, "நண்பா! நீ அளித்த விருந்து மிக நன்றாக இருக்கிறது. நாளைக்கு

நீ என் வீட்டிற்கு விருந்துக்கு வர வேண்டும்" என்றது. நரியும் ஒப்புக்கொண்டது.

மறுநாள் நரி விருந்து சாப்பிடக் கொக்கின் வீட்டை அடைந்தது. அப்போது கொக்கு, கழுத்துக் குறுகிய நீண்ட இரண்டு ஜாடிகள் நிறைய மீன்களைப் போட்டுக் கொண்டு வந்தது. "நண்பா! உனக்கு மீன்கள் நிரம்பப் பிடிக்குமே! வேண்டிய வரையில் சாப்பிடு" என்று நரியின்



முன்னே ஒரு ஜாடியை வைத்தது. மற்றொன்றைத் தனக்கு முன் வைத்துக் கொண்டது. நரி, ஜாடிக் குள் தன் தலையை நுழைத்து மீன்களைத் தின்ன முடியாமல் கஷ்டப்பட்டது. கொக்கு ஜாடிக்குள் தன் நீண்ட அலகை விட்டுச் சுலபமாக மீன்களை எடுத்துத் தின்றுகொண்டே நரியைப் பார்த்துச் சிரித்தது. நரியும் வெட்கித் தலை குனிந்தது.

எவரையும் ஏமாற்றலாகாது.

| | | |
|---|---|---|
| கேலி | பாயசம் | தீர்மானித்தது |
| விருந்து | உபசரிப்பு | ஒப்புக்கொண்டது |
| அழைத்தது | ஏமாற்றி | குறுகிய |
| தட்டுக்கள் | பதிலுக்கு | ஜாடி |

வினாக்கள்

1. நரி ஏன் கொக்கை விருந்துசாப்பிட அழைத்தது?
2. நரி விருந்து வைத்த விதம் என்ன?
3. கொக்கு எப்படி விருந்து நடத்தியது?



# 20. வீட்டுத் தோட்டம்

இது எங்கள் வீட்டுத் தோட்டம். இதன் நீளம் அறுபது அடி; அகலம் முப்பது அடி. இதைச் சுற்றிலும் சுவர் இருக்கிறது. இந்தத் தோட்டத்தின் நடுவில் ஒரு கிணறு இருக்கிறது.

இந்தத் தோட்டத்தில் தென்னை, வாழை, மா, பலா முதலிய பலவகை மரங்கள் இருக்கின்றன. இன்னும் இங்கே அரைக்கீரை, முளைக்கீரை, கத்திரி, வெண்டை முதலியவற்றின் பாத்திகளும் இருக்கின்றன. அவரை, பாகல், பூசணி, பறங்கி முதலிய கொடிகளும்கூட இங்கே இருக்கின்றன.

கிணற்றைச் சுற்றிலும் நான்கு வாய்க்கால்கள் உள்ளன. கிணற்று நீர் அவற்றின் வழியாக ஓடி, மரஞ் செடி கொடிகளுக்குப் பாயும். நாங்கள் காலை மாலை வேளைகளில் தண்ணீர் பாய்ச்சுவோம்.

தோட்டத்திலுள்ள கிணற்றில் ஓர் ஏற்றம் இருப்பதைப் பாருங்கள். என் தகப்பனார் ஏற்றத்தின் உதவியால் தண்ணீர் இறைப்பார். நானும் என் தாயாரும் கால்வாய்களின் வழியாகப் பாத்தி

களுக்கும் மரஞ் செடி கொடிகளுக்கும் தண்ணீர் பாயும்படி பார்த்துக் கொள்வோம். இன்னும் நாங்கள் தோட்டத்தில் செத்தை குப்பை இல்லாத படி சுத்தப்படுத்துவோம். தோட்ட வேலைக்காக எங்கள் வீட்டில் மண்வெட்டி, களைக்கொட்டு, பூவாளி முதலியவை இருக்கின்றன.

| | | |
|---|---|---|
| நீளம் | அரைக்கீரை | வாய்க்கால் |
| அகலம் | முளைக்கீரை | இறைப்பார் |
| அடி | அவரை | மரஞ் செடி |
| அறுபது | புடல் | கொடிகள் |
| முப்பது | பாகல் | மண்வெட்டி |
| சுற்றிலும் | பூசணி | களைக்கொட்டு |
| பலவகை | பாத்திகள் | பூவாளி |

## பயிற்சி

### I வினுக்கள்

1. தோட்டத்தில் உள்ள மரங்கள் எவை? செடிகள் எவை? கொடிகள் எவை?
2. தோட்டத்தைச் சுற்றி சுவர் இருப்பானேன்?
3. யார் யார் தோட்ட வேலை செய்கிறுர்கள்?
4. தோட்ட வேலைக்காக உள்ள கருவிகள் எவை?

II. கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை எழுது:

1. தோட்டத்தில்——— ——— ——— முதலிய மரங்கள் இருக்கின்றன.
2. தோட்ட வேலைக்காக——— ——— ———முதலியவை இருக்கின்றன.
3. என் ——— ——— தண்ணீர் இறைப்பார்.
4. என் ——— ——— தண்ணீர் பாயும்படி செய்வோம்.
5. தோட்டத்தில் ——— ——— இல்லாமல் சுத்தப்படுத்துவோம்.

**III.** பின்கண்டவைகளை வாசி : பின்னுல் கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்களை அமை.

நான் நேற்றுத் தோட்டத்திற்குப் போனேன்.

நான் நேற்றுப் பூவாளி வாங்கினேன்.

நான் நேற்றுத் தண்ணீர் இறைத்தேன்.

நான் இன்று தோட்டத்திற்குப் போகிறேன்.

நான் இன்று பூவாளி வாங்குகிறேன்.

நான் இன்று தண்ணீர் இறைக்கிறேன்.

நான் நாளைக்குத் தோட்டத்துக்குப் போவேன்,

நான் நாளைக்குப் பூவாளி வாங்குவேன்.

நான் நாளைக்குத் தண்ணீர் இறைப்பேன்.

நான் நேற்றுத் ——— போனேன்.

நான் நேற்றுப் ——— வாங்கினேன்

நான் இன்று ——— போகிறேன்.

நான் இன்று ——— வாங்குகிறேன்.

நான் இன்று ——— இறைக்கிறேன்.

நான் ——— தோட்டத்துக்குப் போவேன்.

——— நாளைக்குத் ——— இறைப்பேன்.

——— நாளைக்குத் ——— போவேன்.

——— நாளைக்குப் ——— வாங்குவேன்.

———



## 21. எங்கள் குடும்பம்

எங்கள் குடும்பத்தில் நான், என் அண்ணன், என் தங்கை, என் தம்பி, என் தாயார், என் தகப்பனுர் ஆக ஆறு பேர்கள் இருக்கிறோம். நான் இரண்டாம் வகுப்பில் படிக்கிறேன். என் பெயர் **கோபாலன்.** என் அண்ணன் எட்டாம் வகுப்பில் படிக்கிறுன்; அவன் பெயர் **வேலன்.** என் தங்கை பெயர் **கமலம்**; அவள் முதல் வகுப்பு படிக்கிறுள். என் தம்பி சிறு குழந்தை; அவன் பெயர் **கண்ணன்** என் தந்தை மளிகை வியாபாரி; அவர் பெயர் **வேணுகோபாலச் செட்டியார்.** என் தாயார் வீட்டு வேலைகளைக் கவனிப்பார்; எங்களுக்குச் சொல்லியும் கொடுப்பார்; அவர் பெயர் **அன்னக்கிளி.**

நாங்கள் எல்லோரும் காலை ஐந்து மணிக்கு எழுந்திருப்போம். உடனே கடவுளை வணங்குவோம். பிறகு பல் துலக்குவோம்; குளிப்போம். அப்புறம் துவைத்து உலர்த்திய சுத்தமான உடைகளை உடுத்துவோம். தாயார் எங்களுக்குப் பலகாரங்கள் படைப்பார். பிறகு தாமும் உண்பார். தகப்பனுர் கடைக்குப் போவார். நானும் என் அண்ணனும் தங்கையும் கொஞ்ச நேரம் பாடம்

படிப்போம். பிறகு பள்ளிக்கூடம் போவோம். என் தம்பி வீட்டிலே விளையாடிக்கொண்டு இருப் பான்.

மாலையில் நாங்கள் தோட்டவேலை செய் வோம். அண்ணன் தண்ணீர் இறைப்பான்; நானும் தாயாரும் தண்ணீர் பாய்ச்சுவோம். பிறகு மாலை ஆறுமணி முதல் இரவு எட்டுமணி வரை யில் பாடம் படிப்போம். சில சமயங்களில் தாயார் எனக்குப் பாடம் கற்பிப்பார். தகப்பனுர் கதை கள் சொல்லுவார். இரவில் நாங்கள் கடவுளைத் துதித்துவிட்டுப் படுக்கைக்குப் போவோம்.

| | | |
|---|---|---|
| குடும்பம் | குழந்தை | துலக்குவோம் |
| தகப்பனுர் | மளிகை | துவைத்து |
| தாயார் | வியாபாரி | உலர்ந்திய |
| அண்ணன் | கவனிப்பார் | உடைகள் |
| தங்கை | எழுந்திருப்போம் | பலகாரங்கள் |
| தம்பி | வணங்குவோம் | படைப்பார் |

## பயிற்சி

### 1 வினுக்கள்

1. கோபாலன் குடும்பத்தில் உள்ளவர்கள் யாவர் ?
2. அவர்கள் காலையில் என்ன செய்வார்கள் ?
3. மாலையில் அவர்கள் என்ன செய்வார்கள் ?
4. கோபாலன் தாயார் அவனுக்குச் செய்வது என்ன ? தகப்பனுர் அவனுக்குச் செய்வது என்ன ?

II. பின் வரும் வாக்கியங்களைக் கவனித்து அது போன்ற வாக்கியங்களில் கோடிட்ட இடங்களை நிரப்பு :

1. நாங்கள் காலை ஏழு மணி முதல் ஒன்பது மணி வரையில் பாடம் படிப்போம்.
2. நாங்கள் மாலை ஆறு மணி முதல் இரவு எட்டு மணி வரையில் பாடம் படிப்போம்.

(1) நாங்கள் — ஏழு — முதல் — மணி வரையில் பாடம் படிப்போம்.

(2) நாங்கள் — ஆறு — முதல் — எட்டு — வரையில் பாடம் படிப்போம்.

III. தகப்பனார் தாயார் முதலிய பெரியவர்களிடம் பேசும் போது மரியாதையுடன் பேசவேண்டும்.

(மாதிரி) அம்மா, தண்ணீர் கொடுங்கள்.
அப்பா, புத்தகம் வாங்கிக் கொடுங்கள்.
மாமா, வாருங்கள்.
அண்ணா, என்னையும் கூட்டிச்செல்லுங்கள்.
தாத்தா, கதை சொல்லுங்கள்.

பின்கண்டவைகளைத் திருத்துக :

1. அப்பா, காலணா கொடு.
2. அம்மா, சோறு போடு.
3. அண்ணா, பந்தைக் கொடு,
4. மாமா, இதைப் பார்.
5. பாட்டீ, பலகாரம் கொடு.
6. ஐயா, வழி விடு.
7. அண்ணா, பாடம் சொல்லிக் கொடு.
8. ஐயா, நீ யார்?

# 22. வண்டிகள் I



இது கை வண்டி. இதற்குக் கூண்டு இல்லை. இதை மனிதன் இழுப்பான். இதில் விறகு ஏற்றலாம். வீட்டுச் சாமான்களை ஏற்றலாம். மூட்டைகளை ஏற்றலாம்.

இது இரட்டை மாட்டு வண்டியில் ஒரு வகை. இது மொட்டை வண்டி. இதைக் கட்டை வண்டி என்றும் சொல்வார்கள். இதை இரண்டு எருதுகள் இழுப்பதைப் பார். இது நெல் மூட்டை, அரிசி மூட்டை, செங்கல், மண் முதலியவைகளை ஏற்றிச் செல்ல உதவும்.



இது இரட்டை மாட்டுவண்டியில் மற்றொரு வகை. இது கூண்டு வண்டி. இது மனிதர்களையும் சாமான்களையும் ஏற்றிச் செல்லும். இரயில், மோட்டார் முதலியவை இல்லாத முன் காலத்தில் இதுவே பிரயாணத்திற்கு உபயோகிக்கப்பட்டது. இப்போதும் கிராமங்களில் இது உபயோகிக்கப் படுகிறது.



இது ஒற்றை மாட்டுவண்டி. இது சிறியதாய் இருப்பதைப் பாருங்கள். இதில் நான்கு பேர் உட்காரலாம். சாமான்களை அதிகமாக இதில் ஏற்ற முடியாது. அதிக தூரமில்லாத இடங்களுக்கு ஏழைகள் இதில் ஏறிச் செல்வார்கள். நீ இதில் சென்றிருக்கிறாயா ?



இது குதிரை வண்டி. இதுவும் அதிக தூரமில்லாத இடங்களுக்குப் பிரயாணம் செய்ய உதவும். இதிலும் நான்கு பேர்தான் உட்காரலாம். சாமான்களை அதிகமாக ஏற்ற முடியாது. இது ஒற்றை மாட்டு வண்டியை விட வேகமாகச் செல்லும்.



| | | |
|---|---|---|
| கை வண்டி | மோட்டார் | உபயோகிக்க |
| மொட்டை வண்டி | சாமான்கள் | உட்காரலாம் |
| கூண்டு வண்டி | பிரயாணம் | வேகமாக |
| இரட்டை மாட்டு வண்டி | எருதுகள் | செல்லும் |
| ஒற்றை மாட்டு வண்டி | ஏற்றலாம் | மனிதன் |
| குதிரை வண்டி | விறகு | முன் காலத்தில் |
| இரயில் | உதவுகிறது | செங்கல் |

## பயிற்சி

I. வினாக்கள்

1. கை வண்டி என்பது என்ன? அதன் பயன் என்ன?
2. கூண்டு வண்டி என்பது என்ன? அதன் உபயோகம் என்ன?
3. இரயில், மோட்டார் இவை இல்லாத முன் காலத்தில் எப்படிப் பிரயாணம் செய்தார்கள்?
4. குதிரை வண்டி, ஒற்றை மாட்டு வண்டி இரண்டுக்கும் உள்ள வித்தியாசம் என்ன?

II. பின் கண்ட வாக்கியங்களை மௌனமாய் வாசி :

1. நான் நேற்றுப் பிரயாணம் செய்தேன்.
2. நான் இன்று பிரயாணம் செய்கிறேன்.
3. நான் நாளைக்குப் பிரயாணம் செய்வேன்.
4. நாங்கள் நேற்றுப் பிரயாணம் செய்தோம்.
5. நாங்கள் இன்று பிரயாணம் செய்கிறோம்.
6. நாங்கள் நாளைக்குப் பிரயாணம் செய்வோம்.

**கோடிட்ட இடங்களை நிரப்பு :**

(1) நான் நேற்றுப் பிரயாணம் ———.
(2) நான் ——— பிரயாணம் செய்வேன்.
(3) நாங்கள் இன்று பிரயாணம் ———.
(4) நாங்கள் ——— பிரயாணம் செய்தோம்.

**III.** பின் கண்டவைகளை மௌனமாய் வாசி :

1. நீ நேற்றுப் பிரயாணம் செய்தாய்.
2. நீ இன்று பிரயாணம் செய்கிறாய்.
3. நீ நாளைக்குப் பிரயாணம் செய்வாய்.
4. நீங்கள் நேற்றுப் பிரயாணம் செய்தீர்கள்.
5. நீங்கள் இன்று பிரயாணம் செய்கிறீர்கள்.
6. நீங்கள் நாளைக்குப் பிரயாணம் செய்வீர்கள்.

**கோடிட்ட இடங்களை நிரப்பு :**

(1) நீ ——— பிரயாணம் செய்தாய்.
(2) நீங்கள் நாளைக்குப் பிரயாணம் ———
(3) நீ நாளைக்குப் பிரயாணம் ———.
(4) நீங்கள் ——— பிரயாணம் செய்கிறீர்கள்

**IV.** பின் வருவனவற்றை மௌனமாய் வாசி :

1. அவன் நேற்றுப் பிரயாணம் செய்தான்.
2. அவன் இன்று பிரயாணம் செய்கிறான்.
3. அவன் நாளைக்குப் பிரயாணம் செய்வான்.
4. அவள் நேற்றுப் பிரயாணம் செய்தாள்.
5. அவள் இன்று பிரயாணம் செய்கிறாள்.
6. அவள் நாளைக்குப் பிரயாணம் செய்வாள்.

**கோடிட்ட இடங்களை நிரப்பு :**

(1) அவன் நேற்றுப் பிரயாணம் ——.
(2) அவள் இன்று பிரயாணம் ——.
(3) அவன் நாளைக்குப் பிரயாணம் ——
(4) அவள் நாளைக்குப் பிரயாணம் ——.

———

# 23. வண்டிகள் II



இது மோட்டார் வண்டி. இது **மோட்டார் கார்** என்று சொல்லப்படும். இது இயந்திரத்தின் உதவியால் போகிறது. இது மிகவும் வேகமாக ஓடும். இதை ஓட்டுவதற்குப் பெட்ரோல் இல்லாவிட்டால் இது ஓடாது.



இதுவும் மோட்டார் வண்டிதான். இதற்கு **மோட்டார் பஸ்** என்று பெயர். இதற்கும் பெட்ரோல் வேண்டும். கரியின் உதவியாலும் இதை ஓட்டுவது உண்டு. இது மனிதர்களை ஏற்றிச் செல்ல உதவுகிறது. இதில் அதிகமாகச் சாமான்களை ஏற்ற முடியாது. வண்டியினுடைய கூரையின் மேல் சாமான்கள் ஏற்றிச் செல்லலாம்.



இதுவும் பெரிய மோட்டார் வண்டியாகும். இது **மோட்டார் லாரி** எனப்படும். இது சாமான்களை ஏற்றிச் செல்ல உதவுகிறது. எல்லாவிதச்சாமான்களையும் இது ஏற்றிச் செல்லும். சில சமயங்களில் போர் வீரர்களையும் ஏற்றிச் செல்லும்.



இது **புகை வண்டி**. இது **இரயில் வண்டி** என்றும் சொல்லப்படும். இது மனிதர்களையும், சாமான்களையும் ஏற்றிச் செல்லும். இது இரும்புத் தண்டவாளங்களின் மீது ஓடும். நீண்ட தூரம் சீக்கிரமாகப் பிரயாணம் செய்வதற்கு இதுவே சௌகரியம் ஆனது.

| | | |
|---|---|---|
| மோட்டார் கார் | புகைவண்டி | இரயில் வண்டி |
| மோட்டார் பஸ் | நிலையம் | நீண்ட தூரம் |
| மோட்டார் லாரி | இரும்பு | ஏற்றிக்கொண்டு |
| பெட்ரோல் | தண்டவாளம் | போர் வீரர்கள் |
| கரி | உதவுகிறது | சௌகரியம் |

## பயிற்சி

### I வினாக்கள்

*1. லாரி, பஸ், கார் இவைகளுக்கு உள்ள வித்தியாசம் என்ன ?*

*2. மோட்டார் எதன் உதவியால் போகிறது ?*
*இரயில் எதன் உதவியால் போகிறது ?*

*3. மோட்டார், இரயில் இவற்றில் நீ எதை விரும்பு கிறாய் ? ஏன் ?*

### II மௌன வாசிப்பு

1. பின் கண்டவைகளை மௌனமாய் வாசி :

*(1) சென்னை புகை வண்டி நிலையத்தில் காணப்படும் சில அறிக்கைகள் :*

குடிக்கும் தண்ணீர்
திருடர்கள் ஜாக்கிரதை
சைவ சிற்றுண்டிச்சாலை
பெண்களுக்கு மாத்திரம்
இங்கே டிக்கெட்டு வாங்கவும்
துப்பு இங்கே

(2) சென்னை மோட்டார் பஸ்களில் காணப்படும் சில விளம்பரங்கள்:

**சந்திரா மோட்டார் சர்வீஸ்**

**பூந்தமல்லி - வளர்புரம் - கீழைச்சேரி - கூவம்**

தயவு செய்து டிக்கெட்டு கேளுங்கள்
வண்டிக்குள் புகை பிடிக்கக்கூடாது

II. பின்கண்டவைகளை மௌனமாய் வாசி:

கந்தன் நேற்றுப் பிரயாணம் செய்தான்.
அவன் நேற்றுப் பிரயாணம் செய்தான்.
கமலம் நேற்றுப் பிரயாணம் செய்தாள்.
அவள் நேற்றுப் பிரயாணம் செய்தாள்.
கந்தனும் கமலமும் நேற்றுப் பிரயாணம் செய்தார்கள்.
அவர்கள் நேற்றுப் பிரயாணம் செய்தார்கள்.
கந்தனும் கமலமும் இன்று பிரயாணம் செய்கிறார்கள்.
அவர்கள் இன்று பிரயாணம் செய்கிறார்கள்.
அவன் இன்று பிரயாணம் செய்கிறான்.
அவள் இன்று பிரயாணம் செய்கிறாள்.
அவன் நாளைக்குப் பிரயாணம் செய்வான்.
அவள் நாளைக்குப் பிரயாணம் செய்வாள்.
அவர்கள் நாளைக்குப் பிரயாணம் செய்வார்கள்.

. மௌனமாய் வாசி:

அது நேற்றுப் பிரயாணம் செய்தது.
அது இன்று பிரயாணம் செய்கிறது.
அது நாளைக்குப் பிரயாணம் செய்யும்.
அவை நேற்றுப் பிரயாணம் செய்தன.
அவை இன்று பிரயாணம் செய்கின்றன.
அவை நாளைக்குப் பிரயாணம் செய்யும்.

---

# 24. தீபாவளி



காலைக் கோழி கூவும் முன்னே
கண்ணை விழித்துக் கொள்ளலாம்.
எண்ணெய் தேய்த்து முழுகலாம்.



பட்டணத்தில் வாங்கி வந்த,
பட்டு ஆடை எடுக்கலாம்;
கட்டிப் பார்த்து மகிழலாம்.



பட்ச மான அப்பா விடம்,
பட்டாஸ் கட்டு வாங்கலாம்;
சுட்டுச் சுட்டுத் தீர்க்கலாம்.



தருவாள், அம்மா, பட்சணங்கள்
தட்டு நிறைய வாங்கலாம்;
புட்டுப் புட்டுப் போடலாம்.

—குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா

| | | |
|---|---|---|
| தீபாவளி | தேய்த்து | பட்டு ஆடை |
| முழுகலாம் | பட்டணத்தில் | மகிழலாம் |
| எண்ணெய் | பட்சணங்கள் | பட்சமான |
| தீர்க்கலாம் | பட்டாஸ் கட்டு | புட்டுப் புட்டு |



## 25. எங்கள் பள்ளிக்கூடம்

இது எங்கள் பள்ளிக்கூடம். இந்த ஒரே பள்ளிக்கூடம்தான் எங்கள் ஊரில் இருக்கிறது. பள்ளிக்கூடப் பாடங்கள் படித்து முடிந்ததும் இங்கே நாங்கள் மாலையில் பந்து ஆடுவோம். வேறு சில விளையாட்டுக்களை விளையாடுவதும் உண்டு.

எங்கள் பள்ளிக்கூடம் சீமைஓட்டுக்கட்டிடம். அதில் ஆறு அறைகள் உண்டு. அவற்றுள் ஐந்து அறைகளில் முறையே, முதல் ஐந்து வகுப்புக்கள் உள்ளன. ஆறாவது அறை, உபாத்தியாயர்கள் அறை. அதில் புத்தகங்கள், படங்கள், இன்னும் பாடம் கற்பிப்பதற்கு உதவியாயுள்ள கருவிகள் ஆகியவை இருக்கின்றன.

எங்கள் பள்ளிக்கூடத்தில் சிறிய தோட்டம் உண்டு. அதில் வாழை, தென்னை, மா முதலிய மரங்கள் உண்டு. கீரைப்பாத்தி, கறிகாய்ப் பாத்திகள் முதலியவையும் உண்டு. இன்னும் ரோஜா, மல்லிகை, சாமந்தி முதலிய பூச்செடிகளும் பயிர்

செய்திருக்கிறோம். மாலையில் நாங்கள் தோட்ட வேலை செய்வோம்.

எங்கள் ஆசிரியர்கள் மிகவும் நல்லவர்கள். அவர்கள் எங்களிடம் அன்பாக இருக்கிறார்கள். நன்றாகப் பாடம் கற்பிக்கிறார்கள். எங்களோடு கூடத் தோட்டவேலை செய்வார்கள். காலையில் கடவுள் வணக்கப் பாடல் பாடின பிறகு பாடம் தொடங்கப்படும். மாலையில் பள்ளிக்கூடம் விடும் போதும் கடவுள் வணக்கம் செய்வோம்.

| | | |
|---|---|---|
| பள்ளிக்கூடம் | வகுப்பு | ஆசிரியர்கள் |
| சீமை ஓடு | கறிகாய்ப் பாத்தி | அன்பாக |
| கட்டிடம் | வகுப்புகள் | கற்பிக்கிறார்கள் |
| கருவிகள் | தோட்டவேலை | வணக்கம் |

### பயிற்சி

#### I வினாக்கள்

1. பள்ளிக்கூடத்தில் எத்தனை அறைகள் உள்ளன? அவை எப்படி உபயோகப்படுகின்றன?
2. பள்ளிக்கூடத்துத் தோட்டத்தைப்பற்றி என்ன தெரிகிறது?
3. பள்ளிக்கூடத்தில் என்னென்ன வேலைகள் நடைபெறுகின்றன?
4. ஆசிரியர்கள் எப்படிப் பட்டவர்கள்?

பின்கண்டவற்றை மௌனமாய்ப் படி:

(1) போர்டு உயர்தர ஆரம்பப் பாடசாலை-ஆத்தூர்.

(2) நடுவட்டம் பஞ்சாயத்துப் பாடசாலை.

(3) சாரதா இந்து பெண் பாடசாலை, லால்குடி.

(4) பாரதி ஆரம்பப் பாடசாலை, உறையூர்.

---

# 26. தொழிலாளிகள்

இவன் **உழவன்**. நமக்கு உழவுக்காகத் தானியங்களைப் பயிரிட்டுத் தருபவன் இவன். வயலை உழுது, தண்ணீர் பாய்ச்சி, விதை விதைப்பான். விதைகள் முளைத்துப் பயிர் ஆகும். பிறகு, அவை கதிர் விட்டுத் தானியங்களைக் கொடுக்கும். நெல் இப்படித்தான் பயிர் ஆகிறது.

இவன் **தச்சன்**. இவன் மரவேலை செய்பவன். கலப்பை, மேஜை, நாற்காலி, பெட்டி முதலியவற்றை இவன் செய்வான். வாச்சி, உளி, கொட்டாப்புளி, வாள் முதலியன இவன் உபயோகிக்கும் கருவிகள். வீடுகளுக்குக் கதவு, ஜன்னல், விட்டம் முதலியவைகளும் இவன் செய்வான்.



இவன் **கருமான்**. இவனைக் கொல்லன் என்றும் சொல்லுவார்கள். இவன் இரும்பால் சாமான்களைச் செய்பவன். இரும்பை நெருப்பில் காய்ச்சுவான்; அது இளகிப் பதமாகிவிடும்; உருவங்கள் செய்யவரும். அப்போது அதைச் சம்மட்டியால் அடித்து, வேண்டிய சாமான்களைச் செய்வான். அரிவாள், கோடரி, இருப்புச் சட்டி, கரண்டி முதலியவைகளை இவன் செய்வான்.



இவன் **குயவன்.** இவன் மண்ணால் பாத்திரங் கள் செய்வான். பானை, சட்டி, மண்கூஜா இவற்றைச் செய்ப வன் இவனே. சக்கரம், சக்கரம் சுழற்றும் தடி, தட்டும் பலகை முதலியன இவனது ஆயு தங்கள். இவன் களிமண்ணை நன்றாகப் பிசைந்து சக்கரத்தின் மேல் வைப்பான். அதன் பின் சக்கரத்தைத் தடி யால் சுழற்றுவான். பிறகு, சக்கரத்தின்மேல் உள்ள களிமண்ணில் கையை வைத்து, வேண்டிய உருவங்களைச் செய்வான்.



இவன் **தட்டான்.** இவன் நகைகள் செய்வான். பொன்னாலும் வெள்ளியாலும் நகைகள் செய்வான்; வெள்ளி யால் பாத்திரங்களும் செய்வான். வளையல், சங்கிலி, கம்மல், மூக் குத்தி, ஒட்டியாணம் முதலிய வற்றை இவன் செய்வான். கும் மட்டி அடுப்பு, சுத்தி, ஊதுகுழல் முதலியன இவன் கருவிகள்.



இவன் **கொத்தன்.** இவன் வீடுகள் கட்டுவான். பெரிய கட்டிடங்களும் கட்டு வான். இவனுக்கு உதவி யாகச் **சித்தாள்கள்** உண்டு. அவர்கள் செங்கல், குழைத்த மண் அல்லது சுண்ணாம்பு முதலியவைகளைத் தட்டுக் களில் கொண்டுவந்து கொடுப் பார்கள். செங்கல்களை ஒழுங்காய் அடுக்கி, அதன் மேல் மணல் அல்லது சுண்ணாம்பு கொட்டுவான். அதன்மேல் மறுபடியும் செங்கல்களைப் பதிய வைப்பான். இப்படியே இவன் சுவர் எழுப்புகிறான்



| | | |
|---|---|---|
| உழவன் | வாச்சி | காய்ச்சுவான் |
| தானியங்கள் | உளி | உருவங்கள் |
| விதைப்பான் | கொட்டாப்புளி | சம்மட்டி |
| தச்சன் | வாள் | கோடரி |
| மரவேலை | கருமான் | ஆயுதங்கள் |
| தட்டான் | கும்மட்டி | சுத்தி |
| ஊதுகுழல் | நகைகள் | அடுப்பு |

## பயிற்சி

### I. வினாக்கள்

1. உழவன் வேலை என்ன?
அவன் கருவிகள் யாவை?

2. இரும்பு வேலை செய்பவன் யார்?
அவன் செய்யும் பொருள்கள் யாவை?

3. தட்டான் யார்?
அவன் என்ன வேலை செய்வான்?

4. குயவனிடம் உள்ள சாமான்கள் எவை?

5. கருமானுக்கு வேறு பெயர் என்ன?

II. பின் கண்டவைகளை மௌனமாய் வாசி; சரி அல்லது தப்பு என்று அதற்கு நேராக எழுது:

(1) கொல்லன் நகைகள் செய்வான்.
(2) உழவன் பயிர்த்தொழில் செய்வான்.
(3) குயவன் கோடரி செய்வான்.
(4) கருமான் மேஜை செய்வான்.
(5) தட்டான் வெள்ளிக் கூஜா செய்வான்.
(6) தச்சன் நாற்காலி செய்வான்.

III. கோடிட்ட இடங்களை நிரப்பு:

1. ———— ———— செய்பவன் தச்சன்.
2. கருமான் ———— ———— செய்வான்.
3. தட்டான் ——— செய்வான்.
4. ———— ——— செய்பவன் குயவன்.

———

## 27. குரங்கும் டமாரமும்

ஒரு தோப்பில் குரங்கு ஒன்று வசித்து வந்தது. ஒரு நாள் அது மரங்களின் மேல் தாவிச் செல்லும்போது அதன் வாலில் மரத்தில் இருந்த ஒரு முள் தைத்துவிட்டது.

அந்தத் தோப்பின் அருகில் ஒருவன் உட்கார்ந்து இருந்தான். அவனிடம் குரங்கு சென்றது. தன் வாலில் இருந்த முள்ளை எடுத்துவிடச் சொல்லிற்று. அவன் கத்தியால் முள்ளை எடுக்கும் போது குரங்கின் வால் அறுந்துவிட்டது. அது “நீ ஏன் என் வாலை அறுத்தாய்? உன் கத்தியை எனக்குக் கொடு” என்று கேட்டது. அவனும் வருத்தத்துடன் கத்தியைக் கொடுத்து விட்டான். குரங்கு

வால் போச்சு கத்தி வந்தது

என்று சொல்லிக் கொண்டே போயிற்று.



குரங்கு சென்ற வழியில் ஒரு பையன் மாங்காயை வைத்துக்கொண்டு இருந்தான். குரங்கு அவனைப் பார்த்து “பையா! கத்தியை எடுத்துக் கொண்டு மாங்காயைக் கொடுக்கிறாயா?” என்று கேட்டது. பையனும் ‘சரி’ என்று மாங்காயைக் கொடுத்துக் கத்தியை வாங்கிக் கொண்டான். குரங்கு,

வால் போச்சு கத்தி வந்தது
கத்தி போச்சு மாங்காய் வந்தது

என்று கூவிக்கொண்டே ஓடியது.

குரங்கு ஓடுகையில், வழியில் ஒருவன் செக்கு ஆட்டிக்கொண்டு இருந்தான். அவனிடம் சோறு இருந்தது; ஆனல் ஊறுகாய் இல்லை. குரங்கின் கையில் மாங்காயைப் பார்த்து, "குரங்கே! மாங்காயை எனக்குக் கொடுக்கிருயா? இந்தக் கலயம் நிறைய எண்ணெய் தருகிறேன்" என்ருன். குரங்கும் சம்மதித்துக் கலயத்தை வாங்கிக்கொண்டு



வால் போச்சு கத்தி வந்தது
கத்தி போச்சு மாங்காய் வந்தது
மாங்காய் போச்சு எண்ணெய் வந்தது

என்று பாடிக்கொண்டே சென்றது.

வழியில் கிழவி ஒருத்தி தோசை சுட்டு விற்றுக்கொண்டு இருப்பதைக் குரங்கு கண்டது. அவளிடம் இருந்த எண்ணெய் தீர்ந்துவிட்டது. குரங்கிடம் இருந்த எண்ணெய்க் கலயத்தைப் பார்த்தாள்; "குரங்கே! எனக்கு அந்த எண்ணெயைக் கொடு! உனக்கு நான் நிறையத் தோசை தருகிறேன்" என்ருள். குரங்கும் 'சரி' என்று தோசைகளை வாங்கிக் கொண்டு எண்ணெயைக் கொடுத்தது. பிறகு,



வால் போச்சு கத்தி வந்தது
கத்தி போச்சு மாங்காய் வந்தது
மாங்காய் போச்சு எண்ணெய் வந்தது
எண்ணெய் போச்சு தோசை வந்தது

என்று குதித்துக்கொண்டே ஓடிற்று.

குரங்கு கொஞ்சதூரம் சென்றதும், அங்கு ஒரு டமாரக்காரன் உட்கார்ந்திருந்தான். அவன் பசியால் துடித்துக்கொண்டு இருந்தான். குரங்கிடம் இருந்த தோசைகளைப்பார்த்ததும் அவன், "குரங்கே! டமாரத்தை எடுத்துக் கொள்! தோசையைக் கொடு" என்று கேட்டான். குரங்கு சந்தோஷத்துடன் தோசைகளைக் கொடுத்து விட்டு, டமாரத்தைத் தூக்கிக்கொண்டது.

டமாரத்துடன் அது ஒரு மரத்தின்மேல் ஏறி ஒரு கிளையில் உட்கார்ந்து கொண்டது.

**வால் போச்சு கத்தி வந்தது டும் டும்,**
**கத்தி போச்சு மாங்காய் வந்தது டும் டும்,**
**மாங்காய் போச்சு எண்ணெய் வந்தது டும் டும்,**
**எண்ணெய் போச்சு தோசை வந்தது டும் டும்,**
**தோசை போச்சு டமாரம் வந்தது டும் டும்,**
**டும் டும், டும் டும், டும் டும், டும் டும்**

என்று ஓயாமல் அடித்துக்கொண்டே சந்தோஷக் கூத்தாடியது.

| | | |
|---|---|---|
| தாவி | கூவிக்கொண்டு | கலயம் |
| பொறுக்க | ஆட்டிக்கொண்டு | சம்மதித்து |
| மாட்டாமல் | ஊறுகாய் | தீர்ந்துவிட்டது |
| வைத்துக்கொண்டு | எண்ணெய் | டமாரம் |

**வினாக்கள்**

1. குரங்கின் வால் எப்படி அறுந்தது?
2. குரங்கு மாங்காயை எப்படிப் பெற்றது?
3. குரங்கிற்குத் தோசை எப்படிக் கிடைத்தது?
4. குரங்கு டமாரத்தை அடித்து எப்படிப் பாடியது?

# 28. மிருகக் காட்சிச் சாலை

## (உரையாடல்)

**செங்கற்பட்டு** என்னும் ஊரில் **சாமிநாதன்** என்ற ஒரு சிறுவன் இருந்தான். அவன் சென்னைப் பட்டினத்திலுள்ள தன் மாமன் வீட்டிற்குப் போனான். மாமனுக்கு அவன்மேல் மிகுந்த அன்பு. அவர் அவனைச் **சாமி** என்று அழைப்பார். தின்பண்டங்கள் எல்லாம் வாங்கித் தருவார். அவர் ஒரு நாள் அவனைச் சென்னையில் உள்ள மிருகக் காட்சிச் சாலைக்கு அழைத்துக் கொண்டுபோனார். அங்கே அவர்கள் பார்த்தவை என்ன? அவர்கள் பேசுவதைக் கேளுங்கள்.

**சாமி**: மாமா இதுதானே **சிங்கம்**? இது உறுமுவது எவ்வளவு பயமாக இருக்கிறது?



**மாமா**: சிங்கம் சத்தம் போடுவதை உறுமுகிறது என்று சொல்லக் கூடாது; 'கர்ஜிக்கிறது' என்று சொல்ல வேண்டும். இது எவ்வளவு கம்பீரமாக இருக்கிறது? இதன் பிடரி மயிரைப் பார்த்தாயா? இதன் வாலில் உள் குஞ்சத்தைக் கவனி. இவை எவ்வளவு அழகாய் இருக்கின்றன பார்!

**சாமி**: அதோ அங்கே சத்தம் போடுவது என்ன மாமா?

**மாமா:** அது புலி. வா, அதைப் போய்ப் பார்ப்போம்.

**சாமி:** புலியும் சிங்கத்தைப் போலவே அவ்வளவு பெரிதாய் இருக்கிறதே!

**மாமா:** ஆம்! இது சிங்கத்திற்குச் சமமான பலம் உள்ளது. இதன் உடம்பில் கோடுகள் இருப்பதைப் பார்! சிங்கத்திற்கும் இதற்கும் உள்ள வித்தியாசம் என்ன சொல்லு, பார்ப்போம்!



**சாமி:** இதற்குப் பிடரி மயிர் இல்லை; வாலின் நுனியில் குஞ்சம் இல்லை.

**மாமா:** சரி, நீ கெட்டிக்காரன். வா, போகலாம். சிங்கத்திற்கும் புலிக்கும் குணத்திலும் வித்தியாசம் உண்டு. சிங்கம் இரை தின்ற பிறகு சாந்தமாக இருக்கும். புலி எப்போதும் கொடூர குணம் உள்ளது.

**சாமி:** மாமா, மாமா! இதோ ஒரு சிறிய புலி இருக்கிறது பாருங்கள்!

**மாமா:** இது **சிறுத்தைப் புலி.** இதன் உடம்பில் கோடுகளுக்குப் பதிலாகப் புள்ளிகள் இருப்பதைப் பார்! இது புலியைப்போல் அவ்வளவு உயரம் வளராது. ஆனால் அதைப் போலவே கொடூரம் உள்ளது. இது மரம் ஏறும். புலியும் சிங்கமும் மரம் ஏறமாட்டா.



**சாமி**: அதோ, அந்தக் கூண்டில் என்ன மாமா? பெரிய கருப்புப் பூனை மாதிரி இருக்கிறதே!



**மாமா**: அது **கரும்புலி** என்று சொல்லப்படும். இதுவும் கொடிய காட்டு மிருகமே. ஆனால் சிங்கத்தைப்போல சிற்சில குணங்கள் இதற்கு உண்டு. இது சிறுத்தைப் புலி அளவே வளரும். ஆனால் இது சிங்கம், புலி இவற்றோடும் பயப்படாமல் சண்டை போடும்.

**சாமி**: இங்கே கரடி இருக்கிறதா, மாமா?

**மாமா**: ஓ, இருக்கிறது! வா, போய்ப் பார்க்கலாம். கூண்டின் கிட்டப் போகாதே!

**சாமி**: இதோ கரடி! கூண்டுக் கம்பிகளின் மேல் ஏறுகிறது. இது எவ்வளவு சுறுசுறுப்பாய் இருக்கிறது! நகங்கள் எவ்வளவு நீளம்! நகங்களால் உடம்பைப் பிறிக்கொள்ளுகிறது.

**மாமா**: இதன் நிறம் கறுப்பாய் இருப்பதைப் பார். இது கறுப்புக் கரடி. கரடிகளில் சிவப்புக் கரடி, வெள்ளைக் கரடி என்று வேறு இரண்டு வகைகள் உள்ளன. வெள்ளைக் கரடி வடக்கே வெகு தூரத்தில் வசிக்கிறது. அங்கே நிலம் எல்லாம் பனிக் கட்டியாக இருக்கும் அந்த இடத்திற்குத் **தண்ட்ரா பிரதேசம்** என்று பெயர்.



**சாமி**: ஆம்; மாமா நான் கூடப் புத்தகத்தில் படித்திருக்கிறேன்.

**மாமா**; சரி, வா. அந்தப் பக்கம் போகலாம். இன்னும் மற்ற மிருகங்களையும் பார்க்கலாம்.

| | | |
|---|---|---|
| செங்கற்பட்டு | குஞ்சம் | புள்ளிகள் |
| மிருகக் காட்சிச் சாலை | கொடூரமானது | பயப்படாமல் |
| | வித்தியாசம் | சுறுசுறுப்பாய் |
| சிங்கம் | கெட்டிக்காரன் | கரடி |
| கர்ஜிக்கிறது | சிறுத்தைப் புலி | தண்ட்ரா பிரதேசம் |
| பிடரி மயிர் | கரும்புலி | பனிக்கட்டி |

## பயிற்சி

### 1 வினக்கள்

1. சிங்கம் எப்படி யிருக்கிறது? அதன் குணம் என்ன? அது சத்தம் போடுவதை என்னவென்று சொல்ல வேண்டும்?
2. புலிக்கும் சிங்கத்திற்கும் உள்ள வித்தியாசம் என்ன?
3. கரும்புலியைப் பற்றி நீ அறிந்தது என்ன?

II. பின் கண்டவற்றை மௌனமாய் வாசி:

(1) சிங்கம் சத்தம் போடுவதைக் 'கர்ஜிக்கிறது' என்று சொல்ல வேண்டும்.

(2) கரும்புலி, சிங்கத்தைப்போல் சில நல்ல குணங்களை உடையது.

(3) வெள்ளைக் கரடி. தண்ட்ரா பிரதேசத்தில் வசிக்கும்.

(4) புலிக்குப் பிடரிமயிர் இல்லை; வாலின் நுனியில் குஞ்சம் இல்லை.

# 29. மிருகக் காட்சிச் சாலை II

(உரையாடல்)

**சாமி** : இந்தக் காட்சிச் சாலையில் இன்னும் என்னென்ன மிருகங்கள் இருக்கின்றன ?

**மாமா** : இன்னும் பலவகை மிருகங்கள் இருக்கின்றன. இதோ பார் **ஒட்டைச் சிவிங்கி**!

**சாமி** : ஆ! எவ்வளவு உயரம்; முன்னங்கால்கள் எவ்வளவு உயரம்! பின்னங்கால் சிறிது குட்டை. முதுகு சரிந்திருக்கிறது. உடம்பெல்லாம் பெரிய பெரிய புள்ளிகள். தலை, மான் தலையைப்போல் இருக்கிறது. இது மட்டும் ஏன் மாமா இவ்வளவு உயரமாக இருக்கிறது ?



**மாமா** : மரத்தின்மேல் உள்ள இலைகளே இதற்கு ஆகாரம். அதனால் கடவுள் இதை இவ்வள்வு உயரமாகப் படைத்திருக்கிறார். அதோ அங்கு **ஒட்டகம்** நடந்து வருவதைப் பார்!

**சாமி** : ஆஹா! எவ்வளவு அழகு! அதன் மொட்டைத்தலையும், தொங்கும் உதடுகளும் திமில் முதுகும் அழகு! அழகு!

**மாமா** : அழகு இல்லையென்று பழிக்கிறாயா? நீ இதைப்பற்றிப் புத்தகத்தில் படித்திருக்கிறாயா? இதற்குப் **பாலைவனக் கப்பல்** என்று பெயர். பாலைவனத்தில் வசிப்பவர்கள் இது இல்லாவிட்டால் பிழைக்கவே முடியாது. இது இல்லாவிட்டால்



அவர்கள் பாலைவனத்தில் பிரயாணம் செய்ய முடியாது. இதன் பால் அவர்களுக்கு உணவு ஆகும்.

**சாமி** : மாமா, மாமா! இந்தக் குதிரையின் மேல் ஏன் இப்படி வரிகளை வரைந்திருக்கிறார்கள்?

**மாமா :** இதுதான் **வரிக்குதிரை.** இயற்கையாகவே இதற்கு இந்த வரிகள் உண்டு. இதன் அமைப்பு எல்லாம் குதிரையைப் போலவேதான். வரிகள் மட்டும்தான் வேறு.



**சாமி :** வேறு வேறுபாடுகளே கிடையாதா?

**மாமா :** குணத்திலும் வேறுபாடு உண்டு. குதிரையைப் பிடித்துச் சுலபமாய்ப் பழக்குவது போல் இதைப் பழக்க முடியாது. காடுகளில் இது கூட்டங் கூட்டமாய் இருக்கும். யாராவது அருகில் போனால் எல்லாம் ஒன்று சேர்ந்து எதிர்க்கும். சிங்கம், புலி இவைகளுக்குக்கூட இவை பயப்படுவதில்லை.

**சாமி** : வாருங்கள் போகலாம். அதோ அந்தப் பக்கத்தில் என்னென்ன மிருகங்கள் இருக்கின்றன?

**மாமா** : அங்கே மான்கள் இருக்கின்றன. வா, போய்ப் பார்க்கலாம்.

**சாமி** : இதோ **புள்ளிமான்.** இது எவ்வளவு சிறியதாக இருக்கிறது. அதோ அந்த மான்

மட்டும் மிகவும் பெரியதாய் இருக்கிறதே, ஏன்? அதன் உடம்பில் புள்ளிகள் இல்லையே?





**மாமா :** ஆம், அது **கடம்பை மான்.** இதோ இந்த மானின் கொம்புகள் எவ்வளவு கிளை களாகப் பிரிந்திருக்கின்றன பார்!

**சாமி :** ஆம், **கலைமான்** என்பது இதுதானே?

**மாமா :** ஆம், வா போவோம். அடுத்தாற் போல் **கங்காரு** இருக்கிறது. பார்க்கலாம்.

**சாமி :** கங்காருவா இருக்கிறது? அதைப் பார்க்க வேண்டுமென்று ஆசையாய் இருக் கிறது. வாருங்கள் போகலாம்.



**மாமா :** அது **ஆஸ்திரேலியா கண்டத்துப்** பிராணி. அது குதித் துக் குதித்து நடக்கும். அதன் வயிற்றில் ஒரு பை உண்டு. அதில் அதன் குட்டி தலையை நீட்டிக் கொண்டு இருக்கிறது பார்!

**சாமி :** அதோ அங்கே உயர மாகத் தாவி வருகிறதே! அது என்ன மாமா?

**மாமா :** அதுவும் கங்காருதான். அது எவ் வளவு உயரமாகத் தாவுகிறது பார்த்தாயா? அது

தன் குட்டியையும் பையில் வைத்துக் கொண்டே குதித்துச் செல்லும்.

**சாமி** : எல்லாம் வேடிக்கையாக இருக்கிறது மாமா! இன்னும் அந்தக் கடைசிக்குப் போகவில்லையே? இருட்டிவிட்டதே!



**மாமா** : ஆம், நேரமாய் விட்டது. வா, போவோம். அங்கு பல வகைக் குரங்குகள் இருக்கின்றன. அவற்றை மற்றொரு நாள் வந்து பார்ப்போம்.

| | | |
|---|---|---|
| ஒட்டைச் சிவிங்சி | கங்காரு | இல்லாவிட்டால் |
| சரிந்து | ஆஸ்திரேலியா | வரிக்குதிரை |
| ஆகாரம் | கண்டம் | வேறுபாடு |
| படைத்திருக்கிறார் | பாலைவனம் | கடம்பை மான் |
| ஒட்டகம் | கம்பளி | புள்ளிமான் |
| அமைப்பு | குதித்து | கலைமான் |

### பயிற்சி

#### வினாக்கள்

1. சாமியும் மாமாவும் பார்த்த மிருகங்கள் யாவை?
2. ஒட்டைச் சிவிங்கிக்கு ஏன் கழுத்து நீளமாய் இருக்கிறது?
3. ஒட்டகத்தின் உபயோகமென்ன?
4. ஒட்டகத்திற்கு மற்றொரு பெயர் என்ன?
5. குதிரைக்கும் வரிக்குதிரைக்கும் உள்ள வேறுபாடுகள் எவை?
6. கங்காருவைப் பற்றி அறிவது என்ன?
7. புலி, கரடி, மான், வரிக்குதிரை இவற்றைப்பற்றி இரண்டிரண்டு வாக்கியங்கள் எழுது.

---



## 30. சத்தியச் சங்கு

சத்தியம் நிலைக்குமென்று சங்கு ஊதுவோம்.
சாந்தமே ஜெயிக்குமென்று சங்கு ஊதுவோம்.
நித்தியம் கடவுளென்று சங்கு ஊதுவோம்.
நீர்க்குமிழாம் வாழ்க்கையென்று சங்கு
ஊதுவோம். (1)

நீதியே நிலைக்கும் என்று சங்கு ஊதுவோம்.
ஞாயமே கெலிக்கும் என்று சங்கு ஊதுவோம்.
வாதுசூது பொய்ம்மை யாவும் ஒன்றேடொன்ருய்
வம்புகொண்டு மறையுமென்று சங்கு
ஊதுவோம். (2)

புண்ணியம் பலிக்குமென்று சங்கு ஊதுவோம்.
பொறுமையே கெலிக்குமென்று சங்கு ஊது
வோம்.
மண்ணிற் செய்த நன்மை தீமை யல்லாமலே,
மற்றதொன்றும் மிச்சமில்லை என்று
ஊதுவோம். (3)

தருமமே நிலைக்குமென்று சங்கு ஊதுவோம்.
தானமே தழைக்குமென்று சங்கு ஊதுவோம்.
கருமமே சிறக்குமென்று சங்கு ஊதுவோம்.
கடவுளுண்மை வடிவமென்று சங்கு
ஊதுவோம். (4)

—நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை

# 31. ஜவஹர்லால் நேரு

மனித ருக்குள் மாணிக்கம்.
மக்கள் போற்றும் வீரராம்.
புனித மான விடுதலை,
பெற வுழைத்த ஜவஹராம்.

பெருமை மிக்க குடியிலே
பிறந்த பெரிய தலைவராம்.
அருமை யான தொண்டுகள்
அதிகம் செய்த நேருவாம்.

சிங்கம் போன்ற வீரத்தால்,
திறமை மிக்க செய்கையால்,
தங்க மான குணத்தினுல்
தரணி போற்றும் தலைவராம்.

அருமை யான வாழ்விலே
அதிகப் பாகம் சிறையிலே
இருந்தார். ஆனுல், இன்றுநம்
இந்தி யாவின் பிரதமர்!

நாட்டு மக்கள் நலமுடன்
நன்கு வாழும் வழியையே
காட்டு கின்ற ஜவஹரைப்
போற்று வோம், நாம்யாவரும்.

—குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா

## ஆத்திசூடி

1. அறஞ் செய விரும்பு.
2. ஆறுவது சினம்.
3. ஈவது விலக்கேல்.
4. ஊக்கமது கைவிடேல்.
5. எண் எழுத்து இகழேல்.
6. ஏற்பது இகழ்ச்சி.
7. ஐயம் இட்டு உண்.
8. ஒதுவது ஒழியேல்.
9. கண்டொன்று சொல்லேல்.
10. ஞயம் பட வுரை.
11. தந்தை தாய்ப் பேண்.
12. நன்றி மறவேல்.

## பழமொழிகள்

1. அவனன்றி அணுவும் அசையாது.
2. ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு.
3. இல்லாது பிறவாது; அள்ளாது குறையாது.
4. ஈனரை அடுத்தால் மானம் அழியும்.
5 உப்பிட்டவரை உள்ளளவும் நினை.
6. ஊரிரண்டுபட்டால் கூத்தாடிக்கு எளிது.
7. எறும்பு ஊரக் கல்லும் தேயும்.
8. ஏழை என்றால் மோழையும் பாயும்.
9. ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்.
10. ஓடுகிறவனைக்கண்டால் துரத்துகிறவனுக்கு எளிது.
11. ஔவியம் பேசுதல் ஆக்கத்திற்கு அழிவு.

# உலகநீதி

1. ஓதாமல் ஒருநாளும்
   இருக்க வேண்டாம்.

2. ஒருவரையும் பொல்லாங்கு
   சொல்ல வேண்டாம்.

3. மாதாவை ஒருநாளும்
   மறக்க வேண்டாம்.

4. வஞ்சனைகள் செய்வாரோடு
   இணங்க வேண்டாம்.

5. நெஞ்சாரப் பொய்தன்னைச்
   சொல்ல வேண்டாம்.

6. அடுத்தவரை ஒருநாளும்
   கெடுக்க வேண்டாம்.

7. மனம்போன போக்கெல்லாம்
   போக வேண்டாம்.




8. தனம்தேடி உண்ணாமல்
   புதைக்க வேண்டாம்.

9. குற்றமொன்றும் பாராட்டித்
   திரிய வேண்டாம்.

10. கற்றவரை ஒருநாளும்
    பழிக்க வேண்டாம்.

11. செய்த நன்றி ஒருநாளும்
    மறக்க வேண்டாம்.

12. தெய்வத்தை ஒருநாளும்
    மறக்க வேண்டாம்.




**KANTI TAMIL VACHAKAM**

**STANDARD II**

By

Vidwan T AIYANPERUMAL KONAR

PALANIAPPA BROTHERS

TRICHY :: MADRAS

---

Price Annas **0-6-0**

---

ASIAN PRINTERS, MADRAS-5.